**அறிஞர்கள் சொல்வர்:** நல்லவர்களைப் பொறாதவனும் நல்லவர்களை வெறுப்பவன் மகாக் கொடியவன். மூடன் மூடத்தனத்திற்காக அடையும் தண்டனையைக் காட்டிலும், கொடியோன் தன் கொடுமைக்காக அடையும் தண்டனை கொடிதாகவே இருப்பது இயல்பு ** ஆக்கமும், வளர்ச்சியும், அழிவும் ஒவ்வொரு பொருளுக்கும் உண்டு ** வீண் பிடிவாதம் கொண்டவர்கள் தங்கள் முயற்சியால் தோல்வி கண்டால் ஆத்திரமடைவது இயல்புதானே ** உண்மையில் பலவீனமாக இருப்பவன் பிடிவாதமாக நடப்பது அகஸ்மாத்தான காரியமே! **

" வாய்த்துடுக்காய் இடம்பமாகப் பேசி நடக்கின்ற அறிவீனர்களைப் பெரியோரென மதித்து, அவருக்கு பயப்படலாகாது. ஒரு வேளை பயம் ஏற்பட்டால், ஒரு யுத்த பூமியிலே கிடந்த பேரிகையில் மரக்கிளை காற்றலைந்து தாக்க, அதிலிருந்து பிறந்த ஓசையைக் கேட்ட நரியானது தனித்து நெருங்கிப் பார்க்க பொய்யானது கண்டது போல, இரைச்சலிடும் மடையர்களை நெருங்கி ஆராய்ந்து பார்த்தால் அவர்களுடைய நடிப்புத் தொழில் வெளிப்பட்டு குழைந்து போகும் ***
"

கடுமையான அடக்குமுறை கடுமையான வெறுப்புணர்வையும் பெருக்கப் பண்ணுகிறது". **

" இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள" -குறள்:-

இதன் பொருள்: ① என்னிடம் பொருள் இல்லை என்று யாசகன் தன் சிறுமை கூறுமுன்னம் கொடுத்தல் ② நம்மிடம் பொருள் பெற்றவன் பிறரிடம் சென்று தன்னிடம் பொருள் இல்லை என்று இழிவுரை கூறாதவாறு யாசகனுக்கு வேண்டுமளவு பொருள் கொடுத்தல் ③ நம்மிடம் பொருள் இல்லையென்று நாம் கூறியதாக யாசகன் பிறரிடம் கூறாவண்ணம் பொருள் கொடுத்தல். ④ என்னிடம் பொருள் இல்லையே என்னும் இழிவுரை நாம் கூறாதவாறு யாசகனுக்குப் பொருள் கொடுத்தல். ***

" அரைத்தவருக்கு ஆட்டுக்கல் சுட்டவருக்குத் தோசைக்கல்" ** கல்லுக்கு கல் அண்டைக் கொடுப்பது போல் **

" வாழ்வையே நீ கெடுக்கிறதென்று அறிந்தும் நம்புகிறதும் ஞானம். அந்தத் தீமையே தோது சமைப்பதும் அந்தத் தோற்றத் தாண்டுவதும், அதிலிருந்து போராடி பெறுவதும் வாழ்ஞானம்." ***

" உயர்ந்த இலட்சியங்களாக அமைந்து ஒரு இலட்சியத்தை எடுத்துக் கொண்டாலும் உடனே நெருப்பு அணைக்கும். அவை பொய்யானதானால் இம்மியும் தெரிந்தால் கிழித்தாலும் நெருப்பு உண்டாவதில்லை. இலட்சியத்தான் நட்டம்." அதுபோல..... ***

" ஆவேசக்காரர்கள் சிநேகமாகமாட்டார்கள். அப்படி இருப்பதுதான் நன்மை. அதனால் எல்லோருக்கும் சந்தோஷம். நாடகத்தில், அவ்விரு கோஷ்டியாரைச் சேர்த்துப் பாடினால் அந் நாடகம் நன்றாக இருக்கிறது; பார்க்க வந்திருக்கும் ஜனங்களும் சந்தோஷப்படுகிறார்கள். ***

" பணமிருந்துவிட்டால் இலேசில் எப்படி எவ்வளவு மாற்றிவிடுகிறது. ஒரு எலி, தன் வளையில் ஒரு பொன் வைத்துக் கொண்டிருந்தது. ஒரு நாள் யானை அந்த வளையின் பக்கம் போய்க் கொண்டிருந்தது. உடனே எலிக்கு கோபம் வந்து விட்டது. எலி வளையிலிருந்து வெளிவந்து, யானையை உதைக்கிறதுபோல் காலைத் தூக்கிக் கொண்டு "யானையே, என் தலைமீது நடந்து செல்ல உனக்கு எவ்வளவு தைரியம்" என்று கேட்டது. பணத்தினால் உண்டான கர்வம் இந்த எலிக்கு ஏற்பட்டது ***

" அறிவு, பலவீனமுடையது; நம்பிக்கை சிவசக்தியுடையது"..